டார்களோ அப்படிப்பட்ட ஷாட்குண்ய பரிபூர்ணரான மகாதேவர் யுத்தத்தில் உன்னுடைய முன்னிலையில் செல்லுகின்றார். பார்த்த! செல்வத்தைப்பெருக்குவதும் புகழை உண்டுபண்ணுகிறதும் ஆயுளை விருத்திபண்ணுகின்றதும் பரிசுத்தமானதும் வேதங்களோடு ஒப்பிடப்பட்டதுமான தேவதேவரான ஈஸ்வரருடைய சதருத்ரியமானது உனக்கு விரித்துரைக்கப்பட்டது. இந்தஸ்தோத்திரமானது விரும்பினவற்றையெல்லாம் அளிப்பது; பரிசுத்தமானது; எல்லாப்பாவத்தையும் அழிக்குந்திறமையுள்ளது; எல்லாப்பாவத்தையும் தணிக்குந்தன்மையுள்ளது. எல்லாவித துக்கங்களையும் பயத்தையும் போக்கக்கூடியது. எந்தமனிதன் [1] நான்குவிதமான இந்தஸ்தோத்திரத்தை எப்பொழுதும் கேட்கிறானோ அந்தமனிதன் எல்லாச்சத்துருக்களையுஞ் ஜயித்து ருத்ரலோகத்தில் கொண்டாடப்படுகிறான். மகாத்மாவான ஈஸ்வரருடைய இந்தச் சரித்திரமானது எப்பொழுதும் யுத்தத்திற்கு ஸாதகமென்று எண்ணப்பட்டிருக்கிறது. சதருத்ரியமந்திரத்தை எந்தப்பக்தன் எப்பொழுதும் ஊக்கத்தோடு படிக்கிறானோ, எவன் கேட்கிறானோ மேலும் மனிதர்களுள் எவன் மகாதேவரான ஈசுவரரை எப்பொழுதும் பக்தியுடன் பூஜிக்கின்றானோ அந்தமனிதன் பிரஸன்னரான த்ரியம்பரிடத்தினின்று வேண்டிய இஷ்டங்களை அடைகிறான். கௌந்தேய! போ; யுத்தம்செய். எவனுக்கு மந்திரியாகவும் ரக்ஷகராகவும் ஜநார்த்தனர் பக்கத்திலிருக்கின்றாரோ அப்படிப்பட்ட உனக்குத் தோல்வி கிடையாது' என்று சொன்னார். பரதசிரேஷ்டரே! சத்துருக்களைச் சிக்ஷிப்பவரே! பராசரபுத்திரரான வியாஸர் யுத்தத்தில் அப்பொழுது அர்ஜுனனைப்பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு வந்த வழியே சென்றார்." என்று ஸூதகுலத்திற்பிறந்தவனான ஸஞ்சயன் அரசனுக்கு இவை அனைத்தையும் உரைத்துவிட்டுக் கர்ணனுடைய வதத்தைப் பார்ப்பதற்காகச் சேனைதங்கியிருக்கும் இடத்தைக் குறித்தே சென்றான்.

ஜனமேஜயமகாராஜனே! மஹாபலவானான பிராம்மணர் ஐந்துநாள் முழுதும் மிக்ககோரமான யுத்தத்தைச்செய்து கொல்லப்பட்டுப் பிரம்மலோகத்தை அடைந்தார். வேதமானது நன்றாக அத்தியயனம் செய்யப்பட்டால் எந்தப் பலனுண்டோ அந்தப்பலன் இந்தப்

[1] இங்கு, 'சுத்தம்=ஒன்றிலும் கலவாதது; சபளம்=எல்லாவற்றிலும் கலந்தது; ஸூத்ரம்=ஸூக்ஷ்மமானது; விராட்=ஸ்தூலமானது என ரூபம். நான்குவிதமாதலின் ஸ்தோத்ரமும் நான்குவிதமாயிற்று' என்பது பழைய உரை.

பாவத்தைப்படிப்பதாலுண்டாகும். இந்தப் பர்வத்தைப்படிப்பதலால் பயமற்றவர்களான க்ஷத்திரியர்களுக்குப் பெரிதும் தகுந்ததுமான கீர்த்தியானது உண்டாகிறது. எந்தமனிதன் இந்தப்பர்வத்தை நித்தியம் படிப்பானே, அல்லது கேட்பானே அவன் மஹாபாபங்களினின்றும் தன்னால் செய்யப்பட்ட கோரமான கர்மாக்களினின்றும் விடுபடுகிறான்; பிராம்மணனுக்கு யஜ்ஞஞ்செய்தால் எந்தப்பலனுண்டாமோ அந்தப்பலன்உண்டாகிறது; க்ஷத்திரியர்களுக்குக் கோரமான யுத்தங்களில் கீர்த்திஉண்டாகிறது; மற்ற இரண்டு வர்ணத்தார்களும் இஷ்டமான காமத்தையும் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் அவ்வாறே அபீஷ்டங்களையும் நித்தியமாக அடைகிறார்கள்" என்று வைசம்பாயனர் கூறினர்.

நாராயணாஸ்திரமோக்ஷபர்வம் முற்றிற்று.

துரோணபர்வம்

முற்றிற்று.